உ

ஸ்ரீவித்தியாரண்ய சங்கரவிஜயத்துள்ள

# ஸ்ரீ சங்கராசாரிய, நீலகண்டாசாரிய சம்வாதம்.



இஃது

தஞ்சைமாநகரம்

ஸ்ரீ-பிரஹ்ம நிஷ்ட பண்டித

வெ. குப்புஸ்வாமிராஜு அவர்களால்

தமிழில்

குறிப்புரையுடன்

இயற்றப்பட்டு

அவர்கள் மாணுக்கருள் ஒருவராகிய

பாகவதர்

ராம. வீராஸ்வாமிராஜு அவர்களால்

ஸ்ரீ வித்தியாவிநோதினி முத்திராசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.



விலை] 1911. [அணா ௪

24-3

௨

ஸ்ரீமன் மஹாகணாதிபதயே நம:

# முகவுரை.

---

வேதாகம புராணாதி பலநூல்களிருக்கினும் அவை விரிந்து கிடத்தலின் பார்க்கச் சக்தியற்றவர்களும், குருபரம்பரா சம்பிரதாயமறியாதவர்களும், சாஸ்திர அபிப்பிராய மறியாதவர்களும், இஷ்டப்படி நடப்பவர்களும், இந்திரிய ஜயமில்லாதவர்களும், சாந்தியாதி குணங்களைச் சம்பாதியாது யாவுமுணர்ந்தவர்களைப் போலப் பிதற்றிக்கொண்டு திரிபவர்களுமாகிய சிலபாஷண்டர்களது, இதம்போலத் தெரிவிக்கும் உபதேசத்தாலும், சஹவாசத்தாலும். மலவிக்ஷேபமென்னும் அந்தக்கரண தோஷங்கள் நீங்கிச் சித்தசுத்தி ஏகாக்கிரவாயிலாக ஆன்மலாபமடையவிரும்பும் பரமஆஸ்திகர் மனங்கலங்கி அஞ்ஞானவிருளால் மூடப்பட்டு திகைக்கின்றனர் அது "क्लेशत्यागकृतेर्पितेन करणव्यूहेन देहेन च स्वानर्थंवत जंतुरार्जयातिचेन् मंतुर्नियंतुःकुतः ॥ शस्त्रेशत्रुजयायनैजगुरुणादत्ते तथैनैवचेत् पुत्राहंतिनिजवपुः कथयरे तत्रापराधीतुकः ॥ ஸ்ரீகுருவானவர் சத்துருவை ஜயிக்கும் பொருட்டு சிஷனுக்கு மந்திரவாளைக் கொடுத்திருக்க அவன் அக்காரியத்தைச் செய்யாது தன் சிரத்தை வெட்டிக் கொள்வது போல, ஈசுவரன் ஜீவர்களுக்குண்டாகும் ஜனன மரண மென்னும் சம்ஸார துக்கத்தை மாற்றிக்கொள்ள, ஞானேந்திரிய கர்மேந்திரிய அந்தக்கரணகூட்டங்களையும் சரீரங்களையும் கொடுத்திருக்கின்றார், அவைகளை ஆன்மலாபமாகிய காரியத்தில் பிரவர்த்திக்கச் செய்யாது அவன் தன்னை வதைசெய்துகொள்ளுவானாயின் அபராதி யாவன்." என்னும் வாக்கியத்தினால் அவர்கள் குற்றமேயாயினும் ஜீவர்கள் மீளாத துன்பமனுபவிப்பதைக்கண்டு அவர்கள் தெளிவுபெறுமாறு பரமகருணாமூர்த்தியும், ஸ்ரீ ஆஞ்சநேயரம்சமாக ஜனித்த சமர்த்தராமதாஸ ஸ்வாமி பரம்பரையைச் சேர்ந்தவரும், ஸ்ரீ விஷ்ணுஸ்வாமியின் மாணாக்கரும், பிரஹ்மநிஷ்டபண்டிதரும், ஸ்ரீவிசாரசந்திரோதயம், பாலபோதம், விசாரசாகரம், விருத்திரத்னாவலி, விருத்திப்பிரபாகரம், ஸ்ரீ பஞ்சதசி,

ஹடயோகப்பிரதீபிகை, ஆத்மபோதம், தத்துவபோதம், அப ரோக்ஷாநுபூதி, தர்க்ககௌமுதி முதலிய பல அரிய பெருநூல் களை தமிழ்நாட்டாருக்கு உபகாரமாக தமிழில் வெளிப்படுத்திய வரும், பதினன்கு வித்தைகளில் வல்லவரும், எமது ஆசிரியரும், தவம், விரதம், சில முதலிவைகளில் தீரருமாகிய ஸ்ரீ-மான் வே. குப்புஸ்வாமிராஜு அவர்கள் வேதாகம புராணாதிகளென்னுங் கிரணங்களோடு கூடிய ஸ்ரீ சங்கராசாரிய ஸ்ரீ நீலகண்டாசாரிய சம்வாதமென்னும் அத்வய ஆதித்தனை வெளிப்படுத்தி, ஆஸ்திகர் மனத்தெழும் சந்தேகவிபரீதமென்னும் அஞ்ஞான விருளையகற் றினர். வேதம் ஆகமம் ஸ்மிருதி புராணாதிகளின் உண்மையான அபிப்பிராயம் யாதென்று அறிவதற்கும், பிறமதவாதிகளான பேதையர்கள் தாமரைத் தடாகத்தை யானைக்கன்று கலக்குவது போலக் கலக்கினும் கலங்காது அவர்கள் புத்தியைத் திருத்து வதற்கும், இந்நூல் மிக்க உபகாரமுடையதெனக் கருதி வெளிப் படுத்தலாயிற்று.

பாகவதர்,

ராம. வீராஸ்வாமிராஜு.



ஸ்ரீகணேசாய நம:

ஸ்ரீசங்கரவிஜயம்.

கரு-வது சருக்கம்.

# ஸ்ரீ சங்கராசாரியருக்கும் ஸ்ரீ நீலகண்டாசாரியருக்கும் நடந்த சம்வாதம்.

சமுத்திர தீரத்தை விட்டு க்ஷமையுடையவராகிய ஸ்ரீசங்கரர் கோகர்ணத்திற்குப் புறப்பட்டார். அவர் அங்குச் சமுத்திரஸ்நாநம் செய்து, பார்வதிப்பிரியனுகிய மகாதேவனை யடைந்து, (நான்கு யகாரங்களால் புஜங்கப்பிரயாத மென்று சொல்லப்படு மிலக்கணமுள்ள) புஜங்கப்பிரயாதவிருத்தங்களால், இரம்மியமும் அற்புதப்பொருளுள்ளனவுமாகிய விசித்திரமான ஸ்தோத்திரங்களைச் செய்தார். அத்தோத்திரஞ் செய்த பின்னர், வணக்கமுடையோர்க்கு வேதாந்தவித்தையைச் சொல்லிக்கொண்டிருக்கும் இச்சங்கரரை ஹரதத்தரென்பவர்தெரிந்து, தமதாசிரியராகிய நீலகண்டரிடத்திற் சென்று பகவானே? சங்கரரென்னும் யதியானவர் தேவரீரை வெல்லவேண்டுமென்னும் விருப்புடையவராய்த் தன் வசமாக்கப்பட்ட பட்டர், மண்டனர் முதலிய சீடர்களுடன் ஸ்ரீபரமேசுவரனது ஆலயத்தி லிருக்கின்றனரென்றுகூறிய அவர் வாக்கியத்தைக் கேட்டுச் செவ்வையாய்க் கோக்கப்பட்ட அநேகப் பிரபந்தரத்நமாலைகளையுடையவரும், வியாசசூத்திரங்களுக்குச் சிவதத்துவபரமான பாஷியஞ்செய்தவருமாகிய சைவசிரேஷ்டரான நீலகண்டர், புன்னகைகொண்டு இவ்வாக்கியங்களைக் கூறுவாராயினர்:—

இம்முனிவர் சமுத்திரத்தை வற்றச்செய்யினும் செய்க. அல்லது ஆகாயத்தினின்றும் ஆதித்தனை வீழ்த்தினும் வீழ்த்துக. அல்லது வானத்தைப் படம்போற் சுருட்டினும் சுருட்டுக. எவ்வாற்றானும் அவர் என்னைச் சயித்தலிற் சமர்த்தராகார்.

பரபக்ஷலக்ஷணமான இருளைத்துரப்பதிற் சூரியனாகிய எனது தர்க்கங்களால் இப்போதே அநேகவிதமாய்ப் பிறப்படும் தமது மதத்தை அவ்வெதியானவர் பார்க்கட்டு மென்று பிதற்றிக்கொண்டு மிகுந்த கோபமுடையவராய் நீலகண்டர் புறப்பட்டார்.

வெள்ளிய விபூதியாற் பூசப்பட்ட அங்கமும் நல்ல வுருத்திராக்கமாலைகளால் அலங்கரிக்கப்பட்டகழுத்து முடையவராய்ச் சைவசாத்திரமோதிய சீடர்களாற் சூழப்பட்டுவரும் நீலகண்டரை, யதியாகிய ஸ்ரீ சங்கரர் கண்டார். மகரிஷி சங்கராசாரியரின் சமீபத்திற் சென்று சுகர் தந்தையாகிய ஸ்ரீ வியாசமுனிவராற் செய்யப்பட்ட ஆத்மசாஸ்திரத்திற்(சாரீரகமீமாம்ஸைக்)கு முன் கபிலாசாரியர் தம்சாஸ்திரத்தை ஸ்தாபித்ததுபோல இக்கவியாகிய நீலகண்டர் தமது பக்ஷத்தைச் செவ்வையாய் ஸ்தாபித்தார். நற்புத்திமான்களில் சிரேஷ்டராகிய சுரேசுவரர், பகவானே! அந்த எனது வெளிப்படும் தெளிவான வாக்கியங்களைக் கணமாத்திரம் காண்பீர்களாக என்று தமது ஆசிரியரை நிறுத்தித் தாம் விவாதஞ்செய்தனர். விவாதஞ்செய்யும் சுரேசுவரரைப் பார்த்து நீலகண்டர், சுமதியே! உனது சாமர்த்தியத்தை யானறிவேன் இம்முனிவர்தாமே இதற்கு விடை பகருக என்று யதிசிரேஷ்டரது முகம் நோக்கியிருந்தார்.

பரபக்ஷத்தாமரைத்தண்டுகளை முறித்துத் தின்பதில் அன்னம்போன்ற சொற்களால் அந்நீலகண்ட சிவாசாரியராற் செவ்வையாய்த் தாபிக்கப்பட்ட மதத்தைத் தண்டியாகிய ஸ்ரீசங்கராசாரியர் கண்டித்தனர். பின்னர் நீலகண்டர் தமது பக்ஷரக்ஷணையை விட்டு அத்வைதத்தை நிராகரிக்க விரும்பியவராய்ப் பேசத் தொடங்கினர். (க)

நீலகண்டர்:—

மிகுந்தசமமுடையவரே! * க. தத்துவமஸி (அது நீ) என்

---

* க. இது சாமவேத சாந்தோக்கியோபநிஷத்தின் சு-வது பிரபாடகத்துச் சுவேதகேதுவென்னும் புத்திரனுக்கு அவர்பிதாவாகிய உத்தாலக முனிவரால் ஒன்பதுமுறை உபதேசிக்கப்பட்டது. இதனை விரிவாய் அறிய விரும்புவோர் தமிழில் செய்யப்பட்டுள்ள தத்துவமஸிமகாவாக்கியவுபதேச மென்னும் நூலிற் காண்க.

றல் முதலிய வேதாந்தங்களுக்கு நீர் சொல்லும் ஜீவேசுர அபேதலக்ஷணயான உமக்கிஷ்டமுள்ள அர்த்தம் யாதோ அது பொருந்தாது. என்னை? இருளொளிகளுக்கு விரோத தர்மமுடையனவா யிருத்தலின் தம்மில் அபேதம் சித்தியாததுபோல ஜீவேசுவரர்களுக்கும் * உ. விரோததர்மமுடையனவா யிருத்தலின் அபேதம் பொருந்தாது. (உ)

விரோததர்மமுள்ள சூரியனுக்கும் பிரதிபிம்பத்திற்கும் அபேதம்நிகழ்வதுபோல சிவத்திற்கும் ஜீவனுக்கும் உண்மையாக அபேதம் நிகழ்கவெனின், அவ்வாறு சொல்லலாகாது. என்னை? வியோமசிவாதியாசாரியர்களின் வர்க்கியப்படி கண்ணுடியிற்றோற்றும் பிரதிபிம்பம் * ௩. மித்தையென் றறியப்படுதலால். (௩)

கண்ணுடியிலுள்ள முகம் பிம்பமுகத்தினும் பேதமாமென் றருகிலுள்ளார் காண்டலால் பிரதிபிம்பித்த முகம் பொய்யா மென்பது தமது மதாநுசாரமான வார்த்தையாம். (ஆகவே) அபேதமெனல் எவ்வாறு பொருந்தும்? (௪)

மாயிகமான ஜீவனது அறியாமையும் ஈசுவரனது சர்வஞ்ஞத்துவமுமாகிய விருத்ததர்மங்களைப் பாதி(மித்தை யென்று நிச்சயி)க்குங்கால் இரண்டற்கும் சிற்சொரூபத்தன்மையால் வேறுபாடின்மையால் அபேதமே வாஸ்தவமாமெனல் கூடாது. (௫)

நூற்றுக்கணக்கான பிரமாணங்களால் நிலைத்துள்ள விருத்த தர்மங்கட்குப் பாத (பொய்யெனும் நிச்சய) முண்டாகமாட்டாது. அவ்வாறு (கேடுண்டாமென)அங்கீகரிக்கின், பேதம் நீர்வார்த்துவிட்டதாகும். எவ்வாறெனின்,விபரீதமான ஆத்தன்மை குதிரைத் தன்மைகளின் பாதத்தால் ஆ குதிரைகட்கு வடிவொற்றுமை

---

* உ. அற்பவறிவு, அற்பசக்தி, பாதந்திரத்துவமுதலியனவும், பேரறிவு, பெருஞ்சக்தி, சுவதந்திரத்துவமுதலியனவும் முறையே ஜீவேசுவரர்களிடத்துள்ள விரோததர்மங்களாம் இவற்றை விரிவாயறியவிரும்புவோர் ஸ்ரீ-விசாரசந்திரோதயம் ௧௧-வது கலையிற் காண்க.

* ௩. பிரதிபிம்பம் மித்தை; பிம்பம் சத்தியம். ஆதலால் பொய்யும் மெய்யும் ஒன்றெனல் எவ்வாறு பொருந்தும்?

யுளதா மென்னும் யுக்தியால் பேதம் நீர் வார்த்துவிட்டதாகும் என்பது பொருள். (சு)

பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களாற் பெறப்பட்டது கெடுவதில் சம்மதமின்றெனின், யான் ஈசுவரனல்லன் எனப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் பெறப்பட்ட ஜீவேசுவரபேதத்தின் நாசமும் விரும்பத்தக்க தன்று. (எ)

இவ்வாறு நூற்றுக்கணக்கான யுக்திகளால் அந்நீலகண்டர் வேதாந்தவாக்கியங்களால் பிரகாசிக்கின்ற அத்வைதமதத்தினை யானைக்கன்று மலர்ந்த தாமரைவனத்தைக் கலக்குவதுபோற் கலக்கினர். (அ)

சங்கரர்:—

பின்னர் நீலகண்டராற் சொல்லப்பட்ட தோஷஜால(கூட்ட)ங்களையுடைய பகவான் ஸ்ரீசங்கராசாரியர் கூறுகின்றார். இவ்வாறு கூறியது உமதிஷ்டப்படி இருக்குக. தத்துவமஸியென்னும் சம்பிரதாய சுருதிவாக்கியத்திற்குப் * உ. பராவர (பிரஹ்ம)த்தின் கண்ணுள்ள அபிப்பிராயத்தைக் கேளும். (கூ)

தத்துவமஸிவாக்கியத்தில் * ரு. அவனே இவன் என்பது போன்ற விருத்தத்தன்மையுணர்ச்சி வாச்சியத்தின்கண்ணுள்ளதாம்; இலக்ஷியத்தின்கண்ணுள்ளதன்று. * சா. பாகலக்ஷணை

---

* உ. பரமாகிய (மேலாகிய) பிரஹ்மாதியர் எவ்வஸ்துவினை நோக்க அவராம் (தாழ்ந்தவர்) ஆகின்றனரோ, அது (பிரஹ்மம்) பராவரா மெனப்படும்.

* ரு. सोऽयं देवदत्तः (ஸோயம் தேவதத்த:) அவனே இத்தேவதத்தன் என்னும் இலௌகிகவாக்கியத்தில் வாச்சியத்தின்கணுள்ள அந்த இந்த என்னும் விரோதபாகங்களை விட்டு மற்றப்பாகமாகிய தேவதத்தனது சரீரபிண்டமாத்திரம் இலக்ஷணையினால் கொள்ளப்படுகின்றதோ, அவ்வாறே இங்கும் வாச்சியத்துள்ள விரோதபாகத்தினை விட்டு விரோதமின்றிய சேதனமாத்திரத்தினை இலக்ஷணையினாற் கொள்ளவேண்டும். இதுவும் விசாரசந்திரோதயமுதலிய நூல்களில் விரிவாய்க் கூறியிருத்தல் காண்க.

* சா. தத்துவமஸிமகாவாக்கியத்திற்கு பாகத்தியாகலக்ஷணையினால் ஐக்கியங்கூறும் சுருதிகளை ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் கக-வது கலை

யால் அவ்விரோதம் ஒழியுங்கால் விரோதமின்றிய வாச்சியத்

---

யில் எடுத்துக்காட்டியிருக்கின்றோம். ஆனதுபற்றி அவற்றை விட்டு ஆஸ்திகர்களுக்கு அச்சுருதியின் உபப்பிருஹ்மணமாயுள்ள புராணவாக்கியங்கள் முதலியவற்றுட் சிலவற்றை இங்கு எடுத்துக்காட்டுவோம். அவை வருமாறு:—

ब्रह्मगीतायां ५ अध्याये.

பிரஹ்மகீதை ரு-வது அத்தியாயம்.

“ यदिदं साक्षिणा वेद्यं तत्सर्वं ब्रह्म केवलम् ।
तत्सत्यं पूर्णचैतन्यं तत्त्वमर्थो न संशयः ॥

எந்த இது சாக்ஷியினால் அறியப்படுகின்றதோ அதுமுழுவதும் பிரஹ்மமாகிய கேவலமாம், அச்சத்தியபூர்ணசைதன்னியம் தத் துவம் அர்த்தமாம்; சம்சய மில்லை.

त्वंशब्दार्थो य आभाति सोऽहंशब्दार्थ एव हि ।
योऽहंशब्दार्थ आभाति स त्वंशब्दार्थ एव हि ॥

எது துவம்சப்தார்த்தமாக விளங்குகின்றதோ அது அகம் (யானென்னும்) சப்தார்த்தமேயாம். எது அகம்சப்தார்த்தமாக விளங்குகின்றதோ, அது துவம்சப்தார்த்தமேயாம்.

त्वमहशब्दलक्ष्यार्थः साक्षात्प्रत्यक्चितिः परा ।
तच्छब्दस्य च लक्ष्यार्थः सैव नात्र विचारणा ॥

துவம்அகம் சப்தலக்ஷியார்த்தம் சாக்ஷாத்மேலான பிரத்தியக் சித்தாம். தத்சப்தத்தின் லக்ஷியார்த்தம் அதுவே. இதில் விசாரணை செய்யவேண்டியதில்லை.

त्वमहंशब्दवाच्यार्थस्यैव देहादिवस्तुनः ।
न तच्छब्दार्थतां वक्ति श्रुतिस्तत्त्वमसीति सा ॥

துவம் அகம் சப்தவாச்சியார்த்தமான தேகாதிவஸ்துக்களுக்கே அத்தத்துவமஸியென்னும் சுருதி தத்சப்தார்த்தத் தன்மையினைக் கூறுகிறதில்லை.

तदर्थैक्यविरुद्धांशं त्यक्त्वा वाच्यगतं श्रुतिः ।
अविरुद्धचिदाकारं लक्षयित्वा ब्रवीति हि ॥

தைக் கொண்டு தத்துவமஸி யென்னும் இரண்டுபதங்கட்கும்

---

வாச்சியத்தின்கணுள்ள தத்பதார்த்தஐக்கியத்திற்கு விரோதமுள்ள அம்சத்தினை விட்டு, விரோதமின்றிய சிதாகாரத்தினை இலக்ஷியித்துச் சுருதி கூறுகின்றது.

तदर्थे च त्वमर्थैक्यविरुद्धांशं विनैव तु ।
कारणत्वादिवाच्यस्थं लक्षयित्वा तु केवलम् ॥
चिदाकारं पुनस्तस्य त्वमर्थैक्यं ब्रवीति च ।

தத்பதார்த்தத்திலும் காரணத்தன்மைமுதலிய வாச்சியத்திருக்கும் துவம்பதார்த்தைக்கியவிரோதமுடைய அம்சத்தினை விட்டு, கேவலசிதாகாரத்தினை இலக்ஷியித்து, மறுபடியும் அதற்கு துவம்பதார்த்தைக்கியமும் கூறுகின்றது.

तत्त्वंशब्दार्थलक्ष्यस्य चिन्मात्रस्य परात्मनः ॥
एकत्वं यत्स्वतः सिद्धं स हि वाक्यार्थ आस्तिकाः ।
इतोन्यथा यो वाक्यार्थः सोऽवाक्यार्थो न संशयः ॥

ஆஸ்திகர்களே ! தத்துவம்சப்தார்த்தலக்ஷியமான சின்மாத்திரமாகிய பரமாத்மாவிற்கு இயல்பாகப்பெறப்பட்ட ஏகத்துவம் எதுவோ அதுவே வாக்கியார்த்தமாம். இதற்கந்நியமான வாக்கியார்த்தம் எதுவோ, அது அவாக்கியார்த்தமாம் (வாக்கியார்த்த மன்று); சம்சயமில்லை."

ब्रह्मगीतायां ७ अध्याये.

பிரஹ்மகீதை எ-வது அத்தியாயம்.

"स्वस्मादन्यतया भातमीशं स्वेनैव सेवितम् ।
अधिष्ठानं समस्तस्य जगतः सत्यचिद्घनम् ॥

தன்னைவிட வேறாக விளங்குகிறவரும், தன்னால் சேவிக்கப்படுகிறவரும், சகலஜகத்திற்கும் அதிஷ்டானரும், சத்தியசிற்கனருமாகிய ஈசனை.

अहमस्मीति निश्चित्य वीतशोको भवत्स्वयम् ।
अस्य चिन्मात्ररूपस्य स्वस्य सर्वस्य साक्षिणः ॥

யான் என்று நிச்சயித்து சுவயம் சோகநீங்கியவனாகின்றான். இந்தச் சின்மாத்திரரூபமும் சர்வசாக்ஷியுமான தனது

ஐக்கியத்தை (சுருதி) வெளிப்படையாகக் கூறுதலால் விரோத மொன்று மில்லை. (௧0)

இவ்வாறு கூறியதில் உம்மாற் சொல்லப்பட்ட * எ. அதிப் பிரசங்க மெதுவோ அஃது உண்டாகாது. எதனால் ஆ குதிரை களிரண்டற்கும் இலக்ஷணையினால் அபேதாநுபூதி யுண்டாகுமோ அத்தன்மைய அவ்விரண்டன், அபேதத்தை யுண்டாக்கும் பிர மாண மின்று. (௧௧)

நீலகண்டர்:—

அவ்வாறாயின், அவ்விருவருக்கும் அறியாமை முற்றறிவு என்னும் தர்மங்களோடுகூடிய ஜீவேசுவரவடிவங்களின் வேறா கிய இங்கு எதனால் இலக்ஷணை யுண்டாகுமோ, அத்தன்மைய அறியப்படும் சொரூபமில்லையே யெனின். (௧௨)

சங்கரர்:—

அவ்வாறன்று ; செவ்வையாய்க் காணப்படுகின்ற ஜீவேசுவர வடிவம் கற்பிதமா மென்னும் யுக்தியினால் அவ்விரண்டற்கும் அதிஷ்டானமான சத்தியவஸ்துவானது எப்போதும் நியமஞ் செய்தலால் அறியத்தக்கதா யிருத்தலின். (௧௩)

---

महिमानं यदा वेद परमाद्वैतलक्षणम् ।

तदैव विद्यया साक्षाद्वीतशोको भवत्ययम् ॥

பரமாத்வைத லக்ஷணமான மகிமையினை எப்போது அறிகின்றானோ அப்பொழுதே இவன் வித்தையினால் சாக்ஷாத் சோகநீங்கியவனாகின்றான்.''

சிவதத்துவசுதாநிதி மகாவாக்கியார்த்தம் கூறுதல் என்னும் ௯-வது அத்தியாயத்தில் நான்கு வேதங்களிலுமுள்ள நான்கு மகாவாக்கியங்கட்கும் அத்வைதபரமாக மிக(ஸ்பஷ்டமா)த்தெளிவாய்ப் பொருள் செய்யப்பட்டுள் ளது, அது விஸ்தாரமாயிருத்தலின் இங்கு எழுதப்படவில்லை. சிவரகசியத் துள்ள ரிபுகீதையினுங்காண்க."

* எ. ஆத்தன்மை குதிரைத்தன்மைகளை விட்டு ஆ குதிரைகளை ஒன்றெனக்காணல் எங்கும் பிரசித்தமின்மையின் அதிப்பிரசங்க மென்றார்.

தம்மாலும் அவ்வாறே திருசியதேகாதிகளில் யானெனுந் தன்மையும் அதன்சடத்துவமும் அங்கிகரிக்கப்படுகின்றன. அச்சீவனது பரிசிஷ்டம்(மிஞ்சியது) எதுவோ அவ்வோர் சத்திய வடிவமே அங்கிகரிக்கத்தக்கதாம். (கச)

கற்பிதமாயிருத்தலின் அசத்தாகிய ஜகத்திற்கு இவ்வாறு *அ. யுக்தியினல் நிரூபிக்கப்படுந்தன்மையின்மையால் அவ்வோர் சத்தியமென்னும் ஈசுவரனது ஜகத்திற்கதிஷ்டானசொரூபமான வடிவம் அவசியம் அங்கிகரிக்கத்தக்கதாம். (கரு)

அதனால் இங்குச் சுருதியின்கண் அறியப்படுகின்ற *கூ. நிருபாதிக இரண்டுசொரூபத்தின்கண்ணும் அறியாமை முற்றறிவு என்னும் இரண்டும்இல்லை; செவ்வரத்தம்பூவினின்றும் பெறப்பட்ட செம்மைக்கு நிருபாதிகமான ஸ்படிகத்தில் பற்றுதலுண்டாதலில்லையாதல்போல. (கசா)

அன்றியும், பேதபுத்தி யதார்த்தமாயின், பேதமுணர்பவர்கட்குப் பயத்தைச்* கo. சுருதி சொல்லலாகாது. விபரீதவுணர்ச்

---

* அ. சிற்றறிவுமுதலிய விருத்ததர்மவிசிஷ்டமான ஜீவாதிசொருபம் கற்பிதம், திருசியமாயிருத்தலால்; இப்பிவெள்ளிமுதலியவற்றைப் போல என்றல் முதலியன யுக்தி.

* கூ. மாயை அவித்தையென்னும் உபாதிகளின்றிய. பிரத்தியக்குப் பிரஹ்மசைதன்னியங்க ளிரண்டிலும்,

* கo. "द्वितीयाद्वै भयं भवति இரண்டாவதனல் பயமுண்டாகின்றது" என்பது தைத்திரீயசுருதி.

சூதசங்கிதை யஞ்ஞவைபவ கண்டம் கo-வது அத்தியாயம்.

"एकत्वं पश्यतो मोहः कः शोक इति चाह हि ।
द्वितीयाद्वै भयं नाल्पे सुखमित्यपि चाह हि ॥

ஐக்கியத்தை (ஒருமையைக்) காண்பவனுக்கு மோகமேது? சோகமேது? என்று ஈசாவாசியசுருதி கூறுகின்றது 'இரண்டாவதனல்பயமுண்டாகின்றது, என்று தைத்திரீயமும், 'அற்பத்தில் சுகமில்லை, என்று சாந்தோக்கியமும் கூறுகின்றன."

சியுள்ளார்க்கோ அனர்த்தசம்பந்த மிருக்கின்றது. பேதபுத்தியே விபரீதபுத்தியாகலின் பேதபுத்தி யுண்டாகலாகாது. (கஎ)

அபேதம் சுருதியின்கண் ணுள்ளதாயினும் யதார்த்தமன்றுதலின் *கக. அபேதமுணர்ந்தகாலத்துப் புருஷார்த்தம் கேட்

---

अतस्तर्कप्रमाणाभ्यां वस्त्वेकत्वं सुनिश्चितं ।
विदुषामनुभूत्या च वस्त्वेकत्वं सुनिश्चितम् ॥

ஆதலால், தர்க்கப்பிரமாணங்களாலும் வஸ்துவொருமை செவ்வையாய் நிச்சயிக்கப்பட்டது. ஞானிகளது அநுபூதியினாலும் வஸ்துவொருமைசெவ்வையாய் நிச்சயிக்கப்பட்டது.

वस्त्वेकत्वं महावाक्यादेव जानन्ति ये जनाः ।
ते मुच्यन्ते हि संसाराद्यथा स्वप्नप्रबोधनात् ॥

எந்த ஜனங்கள் மகாவாக்கியத்தினால் வஸ்துவொருமையினையே அறிகின்றார்களோ, அவர்கள் விழித்தவன் சொப்பனப் பிரபஞ்சத்தினின்றும் விடுபடுவதுபோல், சம்ஸாரத்தினின்றும் விடுபடுகின்றார்கள்.

भेददर्शनमास्थाय मुक्तिं वाञ्छान्ति ये नराः ।
ते महाघोरसंसारे पतन्त्येव न संशयः ॥

பேததரிசனத்தினைக் கொண்டு முக்தியினை எந்த நரர்கள் விரும்புகின்றார்களோ, அவர்கள் மகாகோரமான சம்ஸாரத்தில் விழவே செய்கின்றனர்; சம்சய மில்லை.

द्वैतविज्ञानमासाध्य मुक्तिं वाञ्छन्ति ये नराः ।
ते महामोहसंसारसर्पदष्टा न संशयः ॥

துவைத ஞானத்தைக் கைக்கொண்டு முக்தியினை எந்த நரர்கள் விரும்புகின்றனரோ, அவர்கள் மகாமோகமாகிய சம்ஸாரமென்னும் பாம்பினால் கடிக்கப்பட்டவராவர்; சம்சய மில்லை."

श्रुतिः

ஈசாவாஸ்யசுருதி.

* கக "यस्मिन्सर्वाणि भूतानि आत्मैवाभूद्विजानतः ।
तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः ॥

கப்படலாகாது. யான் சிவனல்லன்என்னும் மயக்கத்திற்குச் சந்தி ரனையளக்கும் புத்திக்குப் பாதமுண்டாதல்போலச் சாஸ்திரத் தால் பாத முண்டாகின்றது. (௧அ)

---

எதன்கண் எல்லாப்பூதங்களும் விசேஷமாய்அறிகிறவனுக்கு ஆத் மாவேயாகின்றதோ. அத்தன்மையவ ஏகத்துவ மறிகின்றவனுக்கு அங்கு, சோகமேது? மோகமேது ?" என்பது ஈசாவாஸ்யசுருதி. இவ்வாறு பேத த்தை நிந்தித்து அபேதத்தைப் புகழ்ந்து ஸ்தாபிக்கும் சுருதிகள் அநேக முள. அவற்றுட் சில ஸ்ரீ விசாரசந்திரோதயத்தின் டிப்பணியில் காட்டப் பட்டிருத்தலின் அவற்றைவிட்டு அச்சுருதிகளின் உபப்பிராஹ்மணமா யிரா நின்ற சில ஆகம புராணாதிவாக்கியங்களை இங்கு எடுத்துக்காட்டுவாம்:—

आगमे ॥

ஆகமம்.

"यथा जलं जले क्षिप्तं क्षीरे क्षीरं घृते घृतं ।
अविशेषं भवेत्तद्वज्जीवात्मपरमात्मनोः ॥

எப்படி ஜலம் ஜலத்திலும், பால் பாலிலும், நெய் நெய்யிலும் வார்க்கப் பட்டு விசேஷமின்றியதாகுமோ. அதுபோல, ஜீவாத்ம பரமாத்மாக்களுக்கு அபேதமுண்டாகின்றது."

देविकालोत्तरे ॥

தேவிகாலோத்தரம்.

"सर्वोपाधिविनिर्मुक्तं चिद्रूपं यन्निरंतरं ।
तच्छिवोहमिति ध्यात्वा सर्वासक्तिं विवर्जयेत् ॥

சர்வோபாதிகளினின்று விடுபட்டதும் சித்ரூபமும் எதுவோ அது யான் என்று இடைவிடாது தியானித்து, சகல பற்றையும் ஒழிக்கவேண் டும்." "शिवाद्यवनिपर्यंतोलोकोयं शंकरात्मक : ॥ சிவமுதல் அவனிபரியந்தமான இவ்வுலகம் சங்கரவடிவினதாம்."

सर्वज्ञानोत्तरे योगपादः ॥

சர்வஞானோத்தரம், யோகபாதம்.

"सर्वेष्वेवाहि शास्त्रेषु ज्ञेयं वस्तुचतुष्टयं ।
पशुः पाशं पतिश्चैव शिवश्चेति यथाक्रमम् ॥

எல்லாச்சாஸ்திரங்களிலும் பசு, பாசம், பதி,சிவமென்று கிரமமாக நான்கு வஸ்து அறியத்தக்கதாம்."

सर्वज्ञानोत्तरेज्ञानपादः ॥

ஷை ஞானபாதம்.

" ताम्रस्यैव तु हेमत्वमंतर्लीनं यथास्थितम् ।
अंतर्लीनं तथा ज्ञेयं शिवत्वं पुद्गलस्य तु ॥

எப்படித் தாமிரத்தின் பொன்றன்மையானது உள்ளொடுங்கி நிற்கின்றதோ, அதுபோல ஜீவனது சிவத்தன்மையும் உள்ளொடுங்கியிருக்கிறதென்று அறியத்தக்கதாம்.

रससिद्धं यथा ताम्रं हेमत्वं प्रतिपद्यते ।
तथात्मा ज्ञानसंबद्धः शिवत्वं प्रतिपद्यते ॥

எப்படி இரஸத்தினால் சித்திபெற்ற தாமிரம் பொன்றன்மையை யடைகின்றதோ, அதுபோல ஆத்மா ஞானசம்பந்த முடையதாய்ச் சிவத்தன்மையை யடைகின்றது."

सर्वज्ञानोत्तरेस्वात्मसाक्षात्कारोपदेश प्रकरणः ॥

ஷை சுவாத்மசாக்ஷாத்காரோபதேசப் பிரகரணம்.

" अहमात्मा शिवो ह्यन्यः परमात्मेति यः स्मृतः ।
एवमुपासयेन्मोहान्नशिवत्वमवान्पुयात् ॥

யான் ஆத்மா, அந்நியமாகிய பரமாத்மா சிவன் என்று கேட்கப்படுகின்றான். என்று, எவன் இவ்வாறு மோகத்தினால் உபாசிக்கின்றானோ அவன் சிவதத்துவத்தை யடைகிறதில்லை.

शिवोन्यस्त्वहमेवान्यः पृथग्भावं विवर्जयेत् ।
यश्शिवः सोहमेवेति अद्वैतं भावयेत्सदा ॥

சிவன் வேறு, யான் வேறு என்னும் வேற்றுத்தன்மையினை விடவேண்டும். சிவன் எவனோ அவனேயான் என்று எப்போதும் அத்வைதத்தைப் பாவிக்க வேண்டும்.

घटसंवृतमाकाशं नीयमाने यथा घटे ।
घटो नीयति नाकाशं तद्वज्जीवो नभोपमः ॥

கடத்தைக் கொண்டுபோகும்போது கடத்தினால் செவ்வையாய்ச் சூழப்பட்டுள்ள ஆகாசம் கொண்டுபோவதாகக் காணப்படுகின்றது. ஆனால் கடம் கொண்டுபோகப்படுகின்றது. ஆகாயம் கொண்டுபோகப்படுகிறதில்லை. அதுபோல, ஜீவன் ஆகாயத்திற்குச் சமானமாம்.

भिन्ने कुंभे यथाकाशं आकाशत्वं प्रतिपद्यते ।
विभिन्ने प्राकृते देहे तथात्मा परमात्मनि ॥

குடமுடைந்தபோது எப்படி ஆகாயம் ஆகாயத்தன்மையை யடைகின்றதோ, அதுபோல பிராகிருததேகம்(விதேகமுக்தியில்) விசேஷமாய் நீங்கியபோது ஆத்மா பரமாத்மாவில் ஒன்றுகின்றது அதாவது பரமாத்மத்தன்மையை யடைகின்றது."

॥ श्रीमच्छ्रीकण्ठाचार्यकृत ब्रह्मसूत्रभाष्ये ॥

பிரஹ்மசூத்ரஸ்ரீ கண்டபாஷியத்தின் மங்கலசுலோகம்

" ॐनमोऽहंपदार्थाय लोकानां सिद्धिहेतवे ।
सच्चिदानन्दरूपाय शिवाय परमात्मने ॥

ஓம் அதாவது உலகத்தின் சித்திக்கு ஹேதுவானதும் சச்சிதானந்தவடிவமும் சிவமும் பரமாத்மாவுமாகிய யானெனும் சொற்பொருட்கு நமஸ்காரம்."

॥ तद्भाष்यव्याख्याने ॥

ஷை பாஷியத்திற்கு ஸ்ரீ அப்பயதீக்ஷிதசுவாமிகளியற்றிய சிவார்க்கமணிதீபிகை யென்னும் உரை.

" यद्यप्यद्वैत एव श्रुतिशिखरगिरामागमानां च निष्ठा
साकं सर्वैः पुराणस्मृतिनिकरमहाभारतादिप्रबंधैः ।
तत्रैव ब्रह्मसूत्राण्यपि च विमृशतां भांति विश्रांतिमंति
प्रत्नैराचार्यरत्नैरपि परिजगृहे शङ्कराद्यैस्तदेव ॥

புராணம் ஸ்மிருதி மகாபாரதமுதலியஎல்லாப்பிரபந்தங்களோடு சுருதிமுடிவான உபநிஷதங்கட்கும் ஆகமங்கட்கும் அத்வைதமே நிட்டையாம். அதன்கண்ணே (அத்வைதத்திலேயே) பிரஹ்மசூத்திரங்களும் நிச்சயத்தைக்காட்டி விசிராந்தியடைகின்றன. பழைமையான சங்கரர்முதலிய ஆசாரியரத்நங்களாலும் அதுவே (அத்வைதமே) செவ்வையாய்க் கொள்ளப்பட்டுள்ளது."

शिवपुराणे ज्ञानसंहिते १७-१८ अध्यायः ॥

சிவபுராணம் ஞானசம்ஹிதை கஎ—கஅ-வது அத்தியாயம்.

" अहंशिवः शिवश्चाहं त्वंचापि शिव एव च ।
सर्वं शिवमयं ब्रह्म शिवात्परं न किंचन ॥

யான் சிவன். சிவன் யான். நீயும் சிவமே. எல்லாம் சிவமயமான பிரஹ்மம். சிவத்தைவிட வேறானது சிறிது மில்லை.

अज्ञानादन्यभावश्च ज्ञानेभ्यः समुदाहृतः ।
कारणं कार्यवस्तुत्वे एक एव न चापरः ॥

அஞ்ஞானத்தினால் வேற்றுத்தன்மையா மென்று ஞானங்களால் செவ்வையாய் உதாகரிக்கப்பட்டிருக்கின்றது. காரணம் காரியவஸ்துத்தன்மையில் ஒன்றேயாம்; வேறில்லை.

कारणं च शिवः साक्षात्कार्यं दृश्यं मतं बुधैः ।
अज्ञानाच्चैव कार्ये तु कारणे भेद इष्यते ॥
ज्ञानिनां नैव भेदोस्ति सर्वं शिवमयं जगत् ॥

சாக்ஷாத்சிவம் காரணமாம், திருசியம் காரியமா மென்பது அறிஞர்களால் அங்கீகரிக்கப்பட்டுளது. அஞ்ஞானத்தினாலேயே காரியத்திலும் காரணத்திலும் பேதம் அங்கீகரிக்கப்படுகின்றது. ஞானிகளுக்குப் பேதமில்லை. எல்லாஜகத்தும் சிவமயமாம்.

विष्णुरुवाच ॥

एतस्माच्च शिवादन्यच्छिवादन्यद्दृश्यं नैव भवेदिह ।
वस्तुतस्तु शिव इति प्रसिद्धं वेदसंमतम् ॥

விஷ்ணு சொல்லுகின்றார்:—இச்சிவத்தைவிட வேறான திருசியம் இங்கு இருக்கவேமாட்டாது; வாஸ்தவமாகவோ சிவமே என்பது பிரசித்தமான வேதசம்மதமாம்.

अज्ञानादन्यथाभावो ज्ञाने वस्तु प्रदृश्यते ।
स्थाणौ तु पुरुषभ्रांतिरज्ञानादथ जायते ॥

அஞ்ஞானத்தால் வேற்றுத்தன்மையாம். ஞானத்தில் வஸ்து (மெய்ப்பொருள்) செவ்வையாய்க் காணப்படுகின்றது. தாணுவில் (தறியில்) புருஷமயக்கம் அஞ்ஞானத்தினால் உண்டாகின்றது.

ज्ञाने जाते तथा स्तंभे वस्तुज्ञानप्रदर्शनम् ।
रज्ज्वौ तु सर्पविज्ञानमज्ञानसंभवं नृणाम् ॥

ஞானமுண்டானபோது அவ்வாறே ஸ்தம்பத்தில் வஸ்துஞானக்காட்சியாம். நரர்களுக்கு பழுதையில் பாம்பின்ஞானம் அஞ்ஞானத்தாற்றோன்றியதாம்.

संजाते चैव विज्ञाने रज्जुरेव न चान्यथा ।
शुक्तौ तु रजतज्ञानं ध्यायन् पश्यति कश्चन ॥

விசேஷஞானமுண்டானபோது பழுதையே தோற்றுகின்றது; வேறு வகையில்லை. சுத்தியில் வெள்ளியின்ஞானத்தை ஒருவன் தியானித்துக் காண்கிறான்.

विवेके च समुत्पन्ने शुक्तिरेव न संशयः ।
तथैवाज्ञानजा बुद्धिः शिवादन्यत्र या भवेत् ॥

விவேகமுண்டானபோது சுத்தியே சம்சயமில்லை. இவ்வாறே சிவத்திற் கந்யமானவிடத்தில் எது உண்டாகிறதோ அது அஞ்ஞானத்தினாலாகிய புத்தியாம்.

एवं च ज्ञानदृष्टीनां शिवः शिवः शिवस्तथा ।
अन्यन्निदर्शनं देवि श्रूयतां च वदाम्यहम् ॥

ஞானதிருஷ்டியுடையோருக்கு சிவமே சிவமே சிவமே. தேவி! அவ்வாறே வேறு திருஷ்டாந்தம் சொல்லுகிறேன் கேட்பாயாக.

यथा च नटकः कश्चिद्वेषांतरसमीहया ।
गृह्णाति विविधं वेषं वस्तुत्वे नट एव च ॥

எப்படி ஓர் நடன் (கூத்தாடி) வேறு வேஷங்களின் செவ்வையான விருப்பத்தால் வெவ்வேறு விதமான வேஷங்களைக் கிரகிக்கின்றானோ, வாஸ்தவமாக நடனேயாகின்றானோ.

अज्ञातृणां मनो हृत्वा प्रतार्य धनमाहरेत् ।
ज्ञाता विहसते तत्र नटेनैवाहृतं धनम् ॥

தெரியாதவர்களின் மனதை இழுத்து வஞ்சித்துத் தனத்தைக் கவர்கின்றானோ, தெரிந்தவன் அங்கு நடனால் தனம் அபகரிக்கப்பட்டதென்று நகைக்கிறானோ,

तथैव ज्ञानवान्देवि शिवादन्यन्न पश्यति ।
अज्ञानाद्विविधं रूपं पश्यतीति सुनिश्चितम् ॥

அவ்வாறே ஞானமுடையவன், தேவி! சிவத்திற்கு வேறானதைக் காணான். அஞ்ஞானத்தினால் நாநாவிதவடிவத்தைக் காண்கிறானென்று செவ்வையாய் நிச்சயிக்கப்பட்டது.

देही वस्त्राण्यनेकानि दधाति विविधेहया ।
वस्त्राणि विविधानीह धारकस्त्वेक एव सः ॥

தேகியானவன் பலவகை விருப்பத்தால் அநேகவஸ்திரங்களைத் தரிக்கின்றான். இங்கு நாநாவித வஸ்திரங்களைத் தரிப்பவன் அவன் ஒருவனே.

तथैव शिवरूपं तु संयोगाद्विविधं भवेत् ।
वस्तुतो बंधनं नास्ति ह्याकाररहिते शिवे ॥

அவ்வாறே சிவவடிவம் சையோகத்தால் பலவிதமாகின்றது. வடிவமில்லாத சிவத்தில் உண்மையாகப் பந்தனம் (கட்டு) இல்லை.

यावद्देहं प्रजायेत तावद्वै बंधनं दृढम् ।
निवृत्ते चाप्यहंकारे कर्ता शिव उदाहृतः ॥

எதுவரையில் தேகம் பிறக்கிறதோ அதுவரையில் பந்தனம் திடமாம். அகங்காரம் நீங்கியபோது கர்த்தா சிவனென உதாகரிக்கப்படுகின்றான்.

यथा च स्फटिकश्चैव संयोगाद्विविधो भवेत् ।
तथा प्रकृतिसंयोगाच्छिवस्यानेकता मता ॥

ஸ்படிகம் (செவ்வரத்தம்பூ முதலியவற்றின்) சேர்க்கையால் நாநாவிதமாகின்றது. அவ்வாறே பிரகிருதியின் சையோகத்தால் சிவத்திற்கு அநேகத்தன்மை கொள்ளப்பட்டிருக்கின்றது.

तथा विवेकता तस्याग्रहणे मोचने शिवे ।
प्रकृतेश्च परं ब्रह्म यतच्छिव उदाहृतम् ॥

அவ்வாறே அதன்கிரகணமின்மையிலும் சிவமோசனத்திலும் சிவத்திலும் விவேகத்தன்மையாம். பிரகிருதிக்கு மேலான பரப்பிரஹ்மம் எதுவோ, அது சிவமென்று உதாகரிக்கப்பட்டது."

शिवपुराणे ज्ञानसंहिते ७७-७८ अध्यायः ॥

சிவபுராணம் ஞானசங்கிதை எஎ-எஅ-வது அத்தியாயம்.

"एको ह्यनेकतां यातो ह्यनेकोप्येकतां व्रजेत् ।
एकं बीजं बहुभूत्वा पुनर्बीजं च जायते ॥

ஒருவனே அநேகத்தன்மையை யடைகின்றான்; அநேகனாகியும் ஒருமையையடைகின்றான். ஒருவித்து வெகுவாய் மறுபடியும் வித்தாகின்றது.

बस्तुत्वे च स्वयं सर्वं शिवरूपो महेश्वरः ।
जानाति ज्ञानवानेव नान्यः कश्चिदृषीश्वराः ॥

வாஸ்தவத்தில் எல்லாம் சுவயம் சிவரூபமான மகேசுவரனும். ரிஷீசுவரர்களே? ஞானமுடையவனே (இதனை) அறிகிறான். மற்றொருவனும் அறிகிறதில்லை.

ज्ञाता ज्ञानं तथा ज्ञेयं सर्वं शिवमिदंजगत् ।
ब्रह्मादितृणपर्यंतं यत्किंचिद्दृश्यते जगत् ॥
एतत्सर्वं स एवास्ति नात्र कार्या विचारणा ।
यदेच्छा तस्य जायेत तदा च क्रियते त्विदम् ॥

ஞாதா ஞானம் அப்படியே ஞேயமென்னும் இவ்வெல்லாஜகத்தும் சிவமாம். பிரஹ்மாதிதிருண (புல்) பரியந்தமாக யாதொரு ஜகத்துக்காணப்படுகின்றதோ இவ்வெல்லாம் அவனே. இதில் விசாரணை செய்யவேண்டிய தில்லை. எப்பொழுது அவருக்கு இச்சை பிறக்கிறதோ அப்பொழுது இது செய்யப்படுகின்றது.

सर्वं स एव जानाति तं जानाति न कश्चन ।
रचित्वा च स्वयं चैव प्रविश्य दूरतः स्थितः ॥

எல்லாவற்றையும் அவரே அறிவர். அவரை ஒருவரும் அறிகிறதில்லை. தாமே படைத்துப் பிரவேசித்து விலகி நிற்கின்றார்.

यथा च ज्योतिषश्चैव जलादौ प्रतिबिंबिता ।
वस्तुतो न प्रवेशो वै तथैव च स्वयं शिवः ॥

எப்படிச்சூரியனது பிரதிபிம்பத்தன்மை ஜலமுதலியவற்றில் உண்டாகின்றதோ, வாஸ்தவமாகப் பிரவேசமில்லையோ. அவ்வாறே சுவயம் சிவமுமாம்.

वस्तुतस्तु स्वयं सर्वरूपेणैव तु भासते ।
अज्ञानं च मतेर्भेदो नास्त्यन्यस्य द्वयं पुनः ॥

வாஸ்தவமாகவோ தாமேஎல்லாவடிவாகவும்விளங்குகின்றார். துவைதவிஷயமான மதியின்பேதம் அஞ்ஞானமாம் (அவித்தையினாலாகியதாம்). மற்றதற்கு (ஜகத்விலக்ஷணபிரஹ்மத்திற்கு) இரண்டாவது இல்லை.

दर्शनेषु सर्वेषु मतिभेदः प्रदृश्यते ।
परं वेदांतिनो नित्यमद्वैतप्रतिपादिनः ॥

வைசேஷிகாதி எல்லாச்சாஸ்திரங்களிலும் மதிபேதம் காணப்படுகின்றது. (அது அவித்தையினாலாகியதாம்.) வேதாந்திகள் எப்போதும் கேவலம் அத்வைதத்தினைப் பிரதிபாதிக்கின்றனர்.

स्वस्यैवांशश्च जीवो वै अविद्यामोहितोऽवशः ।
अहमन्यं च जानाति तयामुक्तो भवेच्छिवः ॥

ஜீவன் பரமாத்மாவாகிய எனது அம்சமே. அவித்தையினால் மோகிக்கப்பட்டு அதன்வசமுடையவனாய், நான் வேறென்று அறிகிறான். அவ்வவித்தையினின்று (சிரவணாதிசாதனங்களால்) விடுபட்டுச்சிவனாகின்றான்.

सर्वं व्याप्य शिवः साक्षाद्व्यापकस्सर्वजंतुषु ।
चेतनाचेतनो सो वै सर्वत्र शंकरस्स्वयम् ॥

எல்லாவற்றையும் வியாபித்துச் சிவன் எல்லாப் பிராணிகளிடத்தும் சாக்ஷாத் வியாபகனாகின்றான். சேதனாசேதனங்களிரண்டும் அவனே எங்கும் சங்கரன்றானே.

उपायं यः करोत्यस्य दर्शनं स लभेध्रुवम् ।
यथाग्निर्व्यापकश्चैव काष्ठे काष्ठे च तिष्ठति ॥

எவன் உபாயம் செய்கின்றானோ அவன் நிச்சயமாக இவனுடைய தரிசனத்தை யடைகின்றான். அக்கினியானது வியாபகமாய்க் கட்டைகள் தோறும் நிற்கின்றது.

यो वै मश्नाति तत्काष्ठं स वै पश्यत्यसंशयम् ।
स वै पश्यत्यवश्यं वै नात्र कार्या विचारणा ॥
भक्त्यादिसाधनानीह करोति ऋषिसत्तमाः ।
शिवः शिवः शिवश्चैव नान्यदस्तीह किंचन ॥

எவன் அக்கட்டையைக் கடைகின்றானோ அவன் (அவ்வக்கினியை) சம்சயமின்றிக் காண்கின்றான்.'' அதுபோல ரிஷீசுவரர்களே! எவன் இங்குப் பக்தியாதி சாதனங்களைச் செய்கின்றானோ, அவன் அவசியம் காண்கின்றான். இதில் விசாரணை செய்யவேண்டியதில்லை. சிவமே, சிவமே, சிவமே இதைவிட இங்கு அன்னியம் சிறிதுமில்லை.

नानाभातिस्वरूपो हि भासते शंकरस्सदा ।
यथा समुद्रो मृच्चैव सुवर्णमथवा पुनः ॥
उपाधितो हि नानात्वं लभते च तथैव च ।
कार्यकारणभेदो वस्तुतो न प्रवर्तते ॥

(ஆகாயம் ஒன்றாயிருந்தும் கடாதி உபாதிபேதத்தால்) நாநாவாகக் காணப்படுகின்றது. அதுபோலச் சங்கரனும் எப்போதும் விளங்குகின்றார். எப்படிச் சமுத்திரம், மண், பொன் என்பவை உபாதியினால் (முறையே அலையாதியாகவும், கடாதியாகவும், குண்டலாதியாகவும்) நாநாத்துவத்தை அடைகின்றனவோ, அப்படியே சிவனும் உபாதிபேதத்தால் நாநாத்துவத்தை அடைகின்றார். காரிய காரணபேதமானது வாஸ்தவமாகப் பிரவர்த்திக்கிறதில்லை.

यथा बीजात्प्ररोहश्च नानाविधः प्रकाशते ।
अंते च बीजमेव स्यान्नात्र कार्या विचारणा ॥

வித்தினின்றும் விளைவானது நாநாவிதமாகப் பிரகாசிக்கின்றது. முடிவில் பீஜமேயாகின்றது. இதில் விசாரணை செய்யவேண்டியதில்லை.

ज्ञाने बीजं प्रदृश्येत ह्यज्ञाने विविधं जगत् ।
सर्वं शिवः शिवः सर्वं नात्र भेदोस्ति कश्चन ॥

ஞானமுண்டானபோது வித்து அதாவது சிவம் காணப்படுகின்றது. அஞ்ஞானத்தில் நாநாவித ஜகத்துக் காணப்படுகின்றது. எல்லாம் சிவமே. சிவமே எல்லாம். இங்குப் பேதம் எதுவு மில்லை.

कथं च विविधं पश्येदेकत्वं न कथं पुनः ।
यथैकं चंद्रसूर्याख्यं ज्योतिर्नानाविधं पुमान् ॥
जलादौ च विशेषेण दृश्यते च तथैव सः ।
सर्वत्र व्यापकः सो वै स्पर्शत्वेन निबध्यते ॥

நாநாவிதம் எவ்வாறு காணப்படும் மறுபடியும் ஏகத்துவம் எவ்வாறு காணப்படாது. எப்படி ஒரே சந்திரசூரியனென்னும் ஜோதியானது நாநாவிதமாக ஒரேபுருஷனுக்கு ஜலமுதலியவற்றில் விசேஷமாகக் காணப்படுகின்றதோ, அப்படியே அவன் (சிவன்) நாநாவிதமாகக் காணப்படுகின்றான். எங்கும் வியாபகனாயுள்ள அவனே ஸ்பரிசத்தன்மையாற் கட்டுப்படுகின்றான்.

तथैव व्यापको देवो न बध्नाति पुनः क्वचित् ।
अहंकारतया जीवस्तन्मुक्तः शंकरः स्वयम् ॥

அப்படியே மறுபடியும் வியாபகனாகிய தேவன் ஓரிடத்தும் கட்டுப்படு கிறதில்லை. அகங்காரத்தன்மையால் ஜீவன்; அதனினின்றும் விடுபட்ட வன் ஸ்வயம் சங்கரன்.

यथैकं च सुवर्णं हि ताम्रेण मिलितं यदा ।
अल्पमूल्यं प्रजायेत तथा जीवो ह्ययं पुनः ॥

ஒரேபொன் தாம்பிரத்தோடு கூடியபோது சொற்பவிலையுடைய (மாற்றுக்குறைந்த) தாகின்றது. அவ்வாறே இச்சீவனுமாம் (சிவன் அகங்காராதிகளோடு கூடியபோது ஜீவனாகின்றான்).

तदेव च सुवर्णं हि क्षारादिशोधितं यदा ।
पूर्ववन्मूल्यतां याति तथा जीवस्य संमतम् ॥

அப்பொன்னே காரமுதலியவற்றால் சுத்திசெய்யப்பட்டபோது முன் போலவே விலையுயர்ந்த (மாற்றுயர்ந்த) தாகின்றது. அதுபோலஜீவனு க்கும் சம்மதம் (அகங்காராதி நீங்கியபோது முன்போல சிவனாகின்றான்).

यथा च सद्गुरुं प्राप्य भक्तिभावसमन्वितः ।
शिवबुद्ध्या करोत्युच्चैः पूजनं स्मरणं शुभम् ॥
ध्यानं स्तवं च तद्बुद्ध्या पापादि दूरतो गतम् ।
तदाऽज्ञानं च नश्येत शरीरं चास्थिरं बुधः ॥
मत्वा च नित्यरूपं हि शिवमेव सनातनम् ।
अज्ञानाद्दूरतो भूत्वा ज्ञानवाञ्जायते यदा ॥
तदाहंकारनिर्मुक्तो याति शंकरतां तु सः ॥

சற்குருவையடைந்து, பக்திபாவத்தோடு கூடியவனாய், சிவபுத்தியி னால் உயர்வான பூஜனம், சுபமான ஸ்மரணம், தியானம் ஸ்துதி. என் பவற்றைச் செய்கின்றான். அப்புத்தியினால் பாபமுதலியன விலகிப்போ கின்றன, அப்போது அஞ்ஞானமும் நசிக்கின்றது அறிஞன், சரீரம் நிலை யில்லாதது, நித்தியவடிவினது பழைமையான சிவமே என்று மதித்து, எப்போது அஞ்ஞானத்தினின்றும் விலகி ஞானமுடையவனாகின்றானோ

அப்போது அவன் அகங்காரத்தினின்றும் விடுபட்டவனாய்ச் சங்கர (சிவ) த்தன்மையை அடைகின்றான் ”

शिवपुराणे कैलाससंहिते १० अध्यायः ॥

சிவபுராணம் கைலாஸசங்கிதை கO-ம் அத்தியாயம்.

“ अद्वैतशैववेदोयं द्वैतं न सहते क्वचित् ।
सर्वज्ञः सर्वकर्ता च शिव एव स्वमायया ॥
संकुचरूप इव सन् पुरुषः संबभूवह ।

அத்வைதசைவஞானம் இது. ஓரிடத்தும் துவைதத்வைதச் சகியாது. சர்வஞ்ஞனும் சர்வகர்த்தாவுமாகிய சிவனே தனது மாயையினால் சுருங்கிய வடிவுடையவனைப் போலாகிப் புருஷனாயினன்.

कलादि पंचकेनैव भोक्तृत्वेन प्रकाल्पितः ॥
प्रकृतिस्थः पुमानेषभुंक्ते प्रकृतिजान् गुणान् ।
इति स्थानद्वयान्तस्थः पुरुषो न विरोधकः ॥

கலாதிபஞ்சகத்தினாலேயே போக்தாவெனுந்தன்மையாய்க் கற்பிக்கப் படுகின்றான். பிரகிருதியிலுள்ள இப்புருஷனே பிரகிருதியினாலாகிய குணங்களைப் புசிக்கின்றான். இவ்வாறு இரண்டிடங்களிலுமுள்ள புருஷன் விரோதமுடையவனல்லன்.”

विष्णुपुराणे २ अंशे १५ अध्यायः ॥

விஷ்ணுபுராணம் உ-வது அம்சம் கரு-வது அத்தியாயம்.

“ एकमेवमिदं विद्धि न भेदि सकलं जगत् ।
वासुदेवाभिधेयस्य स्वरूपं परमात्मनः ॥

இதனை (காணப்படும் உலகத்தை) ஒன்றே என்று அறி; பேதமுடையதன்று. சகலஜகத்தும் வாசுதேவனென்னும் பெயரையுடைய பரமாத்மாவின் சொரூபமாம்.”

विष्णुपुराणे १ अंशे १४ अध्यायः ॥

ஷை முதலம்சம் கசு-வது அத்தியாயம்.

“ वेणुरंध्रविभेदेन भेदष्षड्जादिसंज्ञितः ।
अभेदव्यापि वायोस्तथा तस्य महात्मनः ॥

அபேதமாய் வியாபித்துள்ள வாயுவுக்கு மூங்கிலின் துளைவேற்றுமையால் ஷட்ஜமுதலிய (ஸரிகமபதநி என்பதன் முதல்ஸ்வரம் ஷட்ஜமாம்) பெயர்களையுடைய பேத முண்டாகின்றது. அதுபோல அந்தப் பரமாத்மாவுக்குமாம் (உபாதியினால் பேதமுண்டாகின்றது.)"

विष्णुपुराणे २ अंशे १६ अध्यायः ॥

ஷை உ-வது அம்சம் கசு-வது அத்தியாயம்.

" सितनीलादिभेदेन यथैकं दृश्यते नभः ।
भ्रांतदृष्टिभिरात्मापि तथैकस्सन्पृथक्कृतः ॥

எப்படி ஒரேஆகாயம் மயக்கப்பார்வையினால் வெண்மை கருமைமுதலிய பேதங்களாகக் காணப்படுகின்றதோ, அப்படியே (பரமாத்மா) ஒருவராயிருந்தும் பிராந்தர்களால் வேறுபடுத்தப்பட்டிருக்கின்றார்.

एकस्समस्तं यदिहास्ति किंचित्तदच्युतो नास्ति परं ततोऽन्यत् ।
सोहं स च त्वं सर्वमेतदात्मस्वरूपं त्यज भेदमोहम् ॥

இங்கு யாதொன்று இருக்கின்றதோ அதுமுழுவதும் அச்சுதன் ஒருவனே. அவனுக்கு வேறான பரமில்லை. அவன் யான். அவனே நீ. இவ்வெல்லாம் ஆத்மசொரூபம். ஆதலால் பேதமோகத்தினை விடுவாயாக."

विष्णुपुराणे प्रथमांशे २१ अध्यायः ॥

ஷை முதல்அம்ஸம். உக-வது அத்தியாயம். பிரகலாதர்:—

" सर्वगत्वादनंतस्य स एवाहमवस्थितः ।
मत्तस्सर्वमहं सर्वं मयि सर्वं सनातने ॥

அநந்தர் எல்லாவற்றிலுமிருப்பவராயிருத்தலால், யான் அவராகவே நிலைத்திருக்கின்றேன். (விஷ்ணுவாகிய) என்னிடத்தினின்றும், எல்லாம் உண்டாயின. யான் எல்லாமாயிருக்கின்றேன். சநாதனனாகிய என்னிடத்து, எல்லாம் ஒடுங்குகின்றன.

अहमेवाव्ययो नित्यः परमात्मात्मसंश्रयः ।
ब्रह्मसंज्ञोहमेवाग्रे तथांते च परः पुमान् ॥

யானே அவ்வியயமும்நித்தியமுமான பரமாத்மா; ஆத்மாவையே (தன்னையே) நல்லஆசிரயமாக வுடையவன்; பிரஹ்மமென்னும் பெயருள்ளவனாகிய யானே சிருஷ்டிக்குமுன்னும்பின்னும் உள்ளமேலானபுருஷன்."

श्रीमद्भागवते ४ स्कन्धे ११ अध्यायः ॥

ஸ்ரீ பாகவதம் ச-வது ஸ்கந்தம் கக-வது அத்தியாயம்.

"तमेनमङ्गात्मनि मुक्तविग्रहे व्यपाश्रितं निर्गुणमेकमक्षरम् ।
आत्मानमन्विच्छ विमुक्तमात्मदृग्यस्मिन्निदं भेदमसत्प्रतीयते ॥

பிரியனே! எதன்கண் இந்தப்பேதம் அசத்தாகக் காணப்படுகின்றதோ. அத்தன்மைய இந்த விரோதநீங்கிய மனதில் நிலைத்திருப்பதும், நிர்க்குணமும், ஏகமும், அக்ஷரமும், விமுக்தமு (பாசங்களினீங்கியது)மான ஆத்மாவைப் பிரத்தியக்கு (உள்) திருஷ்டியுடையவனுய்த் தேடுவாயாக."

श्रीमद्भागवते ६ स्कन्धे १७ अध्यायः ॥

ஷ கூ-வது ஸ்கந்தம் கஎ-வது அத்தியாயம்.

सुखं दुःखं मृतिर्जन्म शापोऽनुग्रह एव च ॥
अविवेककृतः पुंसो ह्यर्थभेद इवात्मनि ।
गुणदोषविकल्पश्च भिदेव स्रजिवत्कृतः ॥

சுகம் துக்கம், மரணம் ஜன்மம், சாபம் அநுக்கிரகம் என்னும் துவந்துவங்களும் அவற்றில் குணதோஷவிகற்பங்களும் தேகிகளுக்குத்தேகத்தில் ஈசுவரமாயையினுல் உண்டாகின்றன. (இஷ்டாநிஷ்ட) பேதம்போல் எது ஸ்புரிக்கின்றதோ, அது எப்படிப் புருஷர்களுக்கு ஆத்மாவினிடத்து (சொப்பனத்து) அர்த்தபேதம் அவிவேகத்தினுலாகியதோ, எப்படிப் பழுதையில் பாம்புமுதலியன ஆக்கப்படுகின்றனவோ, அப்படி ஆக்கப்படுகின்றது.

श्रीमद्भागवते ११ स्कन्धे १३ अध्यायः ॥

ஷ கக-வது ஸ்கந்தம் கங அத்தியாயம்.

जाग्रत्स्वप्नः सुषुप्तं च गुणतो बुद्धिवृत्तयः ।
तासां विलक्षणो जीवः साक्षित्वेन विनिश्चितः ॥

ஜாக்கிரமும், சொப்பனமும், சுழுத்தியும் குணத்தினுல் புத்தியின் விருத்திகளாம். அவற்றின் விலக்ஷணமான ஜீவன் சாக்ஷித்தன்மையாக நிச்சயிக்கப்பட்டதாம்.

श्रीमद्भागवते १२ स्कन्धे ६ अध्यायः ॥

பாகவதம்.கஉ-வது ஸ்கந்தம் கூ-வது அத்தியாயம்.

"घटे भिन्ने यथाकाश आकाशः स्याद्यथा पुरा ।
एवं देहे मृते जीवो ब्रह्म संपद्यते पुनः ॥

குடமுடைந்தபோது எப்படி ஆகாசம் முன்போல் ஆகாசமாகின்றதோ, இவ்வாறே தேகம் மரித்தபோது ஜீவன் மறுபடியும் பிரஹ்மத்தையடைகின்றான்."

गारुडे ॥

கருடபுராணம்.

"यथैकहेममणिना सर्वं हेममयं जगत् ।
तथैव जातमीशेन जातेनाप्यखिलं भवेत् ॥

எப்படி ஒருபொன்மணியினல் (இம்மணி பொன்மய மென்னும் உணர்ச்சியினல்) எல்லாமணிகளும் பொன்மயமென்று மதிக்கப்படுகின்றனவோ, அப்படியே ஜகம் ஈசனுற்பிறந்தது (என்று உணர) யாவும் காரணமான ஈசவடிவ மாகின்றன.

ग्रहाविष्टो द्विजः कश्चिच्छूद्रोहमिति मन्यते ।
ग्रहनाशात् पुनः स्वीयं ब्राह्मण्यं मन्यते यथा ॥

எப்படிக் கிரகத்தினற் பற்றப்பட்ட ஓர் பிராஹ்மணன் தன்னைச் சூத்திரன் யானென்று மதிக்கின்றானே, கிரகநீங்கியபோது மறுபடியும் தனது பிராஹ்மணத்தன்மையை மதிக்கின்றானே,

मायाविष्टस्तथा जीवो देहोहमिति मन्यते ।
मायानाशात् पुनः स्वीयं रूपं ब्रह्मास्मि मन्यते ॥

அப்படி மாயையினற் பற்றப்பட்ட ஜீவன் தேகம் யானென்று மதிக்கின்றான். மாயை நசித்தபோது மறுபடியும் தனது வடிவமான பிரஹ்மம் யானென்று அறிகின்றான்."

स्कंदपूराणे सनत्कुमारसंहिते मलयाचलखंडे ५ अध्यायः ॥

ஸ்கந்தபுராணம் சநத்குமார சங்கிதை மலயாசலகண்டம் ரு-வது அத்தியாயம்.

" पंचकोशारिक्तस्तु स जीवः परमेश्वरः ॥

பஞ்சகோசங்கட்கு வேறுபட்ட அந்த ஜீவன் பரமேசுவரன்."

" उपाधिभेदै रज्ञाना द्बहुधा भाति शंकरः ॥
देहादिवासनाबद्धः संसारी च प्रवर्तते ।
देहादिवासनात्यक्तः स जीवः परमेश्वरः ॥

*சங்கரன் அஞ்ஞானத்தால் உபாதி பேதங்களால் வெகு விதமாகத் தோற்றுகின்ருன். தேகாதி வாசனையினுல் கட்டப்பட்டவனுபும் சம்சாரியாயும் பிரவர்த்திக்கின்ருன். தேகாதி வாசனையினின்று விடுபட்ட அச்சீவன் பரமேசுவரனும்."*

" सत्यंतः करणे धर्मे शिवो जीवत्व माप्नुयात् ।
तस्मिन्विलीने तस्माच्च जीवत्वं च विनश्यति ॥

*அந்தக்கரண தர்மமுள்ளபோது சிவன் ஜீவத்தன்மையினை அடைகின்ருன். அது (அந்தக்காணதர்மம்) கெட்டபோது அதனுல் ஜீவத்தன்மையும் நசிக்கின்றது.*

प्रतिबिंबं बिंबजात मादर्शोपाधिभेदतः ।
आदर्शे यदि नष्टे तु बिंबे तत्प्रविलीयते ॥

*பிரதிபிம்பமானது கண்ணுடி யுபாதியின் பேதத்தால் பிம்பத்தினின்றும் பிறந்ததாம். கண்ணுடி நசித்தகாலத்து அது பிம்பத்தில் ஒடுங்குகின்றது.*

कारणोत्थितं कार्यं कारणे प्रविलीयते ।
यथा स्वर्णविकाराणि स्वर्णत्वं प्रतिपद्यते ॥

*காரணத்தினின்றெழுந்த காரியம் காரணத்தில் ஒடுங்குகின்றது. சுவர்ணத்தின் விகாரங்கள் சுவர்ணத்தன்மையை அடைவதுபோல.*

नानोपाधिवशादेव जातिनामाश्रमादयः ।
आत्मन्यारोपितास्तोये रसवर्णादिभेदतः ॥

*உபாதி வசத்தினுலேயே ஜாதி பெயர் ஆசிரமமுதலிசன ஜலத்தில் ரஸவர்ணுதி பேதமாக ஆத்மாவில் கற்பிக்கப்பட்டிருக்கின்றன,*

मायोपाधिवशादेव बहुधा भाति शंकरः ।
तस्मिन्नष्टे ह्युपाधौ च एक एव परश्शिवः ॥

உபாதி வசத்தினலேயே வெகுவிதமாய் விளங்குகின்றன் சங்கரன். அவ்வுபாதி நசித்தபோது பரமசிவன் ஒருவனகவே இருக்கின்றன்."

सनत्कूमारसंहिते मलयाचलखण्डे ६ अध्यायः ॥

ஷை சு-வது அத்தியாயம்.

" इदं नाम ममेवेति इयं जातिर्ममैव च ।
इत्येतान्यभिमाना।नि संसारस्सच वै मतः ॥
संसारी जीव एवस्या न्मुक्तस्सदाशिवः ॥

இந்தப்பெயர் என்னுடையது என்பதும் இச்சாதி யென்னுடையதென்பதுமான இவ்வபிமானங்கள் சம்ஸார மெனப்படும். சம்ஸாரியே ஜீவனகின்றன். அதனின்று விடுபட்டவன் சதாசிவனகின்றன்."

सनत्कुमारसंहिते मलयाचलखण्डे ७ अध्यायः ॥

ஷை எ-வது அத்தியாயம்.

" संसारबद्धो जीवो हि तस्मान्मुक्तस्सदाशिवः ॥

சம்சாரத்தினற் கட்டுப்பட்டவன் ஜீவன். அதனினின்று விடுபட்டவன் சதாசிவன்."

" अध्यास एव संसारस्तस्मान्मुक्तस्सदाशिवः ॥

" அத்தியாசமே சம்சாரம். அதினின்று விடுபட்டவன் சதாசிவன்."

सूतसंहिते यज्ञवैभवखण्डे ६९ अध्यायः ॥

சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டம் சுகூ-வது அத்தியாயம்.

" अतो विशेषाकारेण भेदं ये सर्वसाक्षिणः ।
वदंति ते महाभ्रान्ता निमग्नाश्च भवार्णवे ॥

ஆதலால் எவர்கள் சர்வசாக்ஷிக்கு விசேஷவடிவமாகப் பேதத்தினைக் கூறுகின்றார்களோ, அவர்கள் மகா பிராந்தர்களாய்ப் பவசமுத்திரத்தில் மூழ்கினவராவர்.

आत्मनः साक्षित्वमेकत्वं च तथैव च ।
नित्यत्वं चेव शुद्धत्वं भूमानन्दत्वमेवच ।।
ब्रह्मत्वं च द्विजा वेदा वदन्ति श्रद्धया सह ॥

துவிஜர்களே! ஆத்மாவுக்குச் சர்வசாக்ஷித்துவமும், ஏகத்துவமும், அவ்வாறே நித்தியத்துவமும், சுத்தத்துவமும், வியாபகாநந்தமும், பிரஹ்மத்துவமும் வேதங்கள் சிரத்தையோடு கூறுகின்றன.

स्मृतयश्च पुराणानि भारतादीनि चास्तिकाः ॥

महादेवश्च विष्णुश्च ब्रह्मा च मुनयस्तथा ।

नित्यत्वं शुद्धबुद्धत्व मात्मनः प्रवदन्ति हि ॥

ஆஸ்திகர்களே! ஸ்மிருதிகளும், புராணங்களும், பாரதமுதலியனவும், மகாதேவரும், விஷ்ணுவும், பிரஹ்மாவும், அவ்வாறே முநிகளும் ஆத்மாவுக்கு நித்தியத்துவமும் சுத்தபுத்தத்துவமும் கூறுகின்றன.

तस्मादात्मैव विप्रेन्द्रा नित्यं वस्तु नचापरम् ।

जिह्वायां परशुं तप्तं धारयामि न संशयः ॥

ஆதலால் பிராஹ்மணோத்தமர்களே! ஆத்மாவே நித்தியவஸ்து அந்நியமன்று நாவில் பழுக்கக் காய்ச்சிய பரசினைத்தரிப்பேன்; சம்சயமில்லை.''

सूतसंहिते यज्ञवैभवखण्डे १० अध्यायः ॥

சூதசங்கிதை யஞ்ஞவைபவகண்டம் கo-வது அத்தியாயம்.

'' आत्मभेदस्तथैवात्मब्रह्मभेदश्च सुव्रताः ।

उपाधिनैव क्रियते न स्वतो मुनिपुङ्गवाः ॥

நல்ல விரதமுடையோரே! முநிபுங்கவர்களே! ஆத்மபேதமும் அப்படியே ஆத்மப் பிரஹ்மபேதமும் உபாதியினுலேயே செய்யப்படுகின்றது. இயல்பாக இல்லை.

घटाद्युपाधिसंपर्कादाकाशस्य भिदा यथा ।

एकमेवेति वेदान्तास्तात्पर्येण महेश्वरम् ॥

கடமுதலிய வுபாதி சம்பந்தத்தினுல் ஆகாசத்திற்குப் பேதமுண்டாவது போல. ஒன்றேயென்று வேதாந்தங்கள் தாற்பரியத்தினுல் மகேசுவரனைக் கூறுகின்றன.

आहुश्चिद्रूपतो भेदश्चितो नास्त्येव सर्वथा ।

चैत्यरूपेण भेदस्तु चैत्यस्यैव चितो न हि ॥

சித்துவடிவத்தால் சித்திற்குப் பேதம் எவ்விதத்தாலும் இல்லவே இல்லை, (பிரமாத்திருலக்ஷணமாகிய) சைத்தியவடிவத்தால் பேதமோ சைத்தியத்திற்கே யாம்; சித்திற்கில்லை.

आत्मभूतः शिवः साक्षाच्चिन्मात्रज्योतिरेव हि ।
घटादीनां तु चैतन्याना मनात्मत्वस्य दर्शनात् ॥

ஆத்ம சொரூபமான சிவம் சாக்ஷாத் சின்மாத்திர ஜோதியேயாம். கடாதிகளுக்கும் சைத்தியங்களுக்கும் அநாத்மத்தன்மை காணப்படுதலால்.

आत्मनोपि स्वतो भेदमाहुः केचिन्मुनीश्वराः ।
तन्नसंगतमेवस्या दात्माऽभेदस्य साधकः ॥

முநீசுவரர்களே! ஆத்மாவுக்கும் இயல்பாகப் பேதத்தினைச் சிலர் கூறுகின்றனர், அது பொருந்தவே மாட்டாது. ஆத்மா அபேதத்தினைச் சாதிப்பதாம்.

भेदसाक्षी शिवो ह्यात्मा कथं भिन्नो भवेद्द्विजाः ।
अत आत्मनि भेदस्तु भ्रान्तिसिद्धो न वस्तुतः ॥
एकस्य नभसो भेदो यथा भ्रान्त्या प्रतीयते ॥

துவிஜர்களே! பேதசாக்ஷியான சிவமாகிய ஆத்மா எப்படி வேறுபட்டதாம். ஆதலால் ஆத்மாவினிடத்து பேதம் பிராந்தி சித்தமாம்; வாஸ்தவமாக இல்லை. ஒரே ஆகாயத்திற்குப் பிராந்தியினல் பேதம் காணப்படுவதுபோல."

"स्वरूपत्वेन वा विप्रा धर्मत्वेनैव भिदा ।
अपि वर्षशतेनापि वस्तुतो ननिरूप्यते ॥

விப்பிரர்களே? பேதமானது சொரூபமாகவாவது தர்மத்தன்மையாகவாவது நூறு வருஷத்தாலும், உண்மையாக நிரூபிக்கப் படமாட்டாது.

" एकमेवाद्वितीयं सदित्याह श्रुतिरादरात् ।
मायामात्रमिदं द्वैतमिति चाह परा श्रुतिः ॥

ஒரே அத்விதிய சத்திருந்தது என்று (சாந்தோக்கிய) சுருதி ஆதரவோடு கூறுகின்றது. மாயா மாத்திரம் இத்துவைதம் என்று மேலான (மாண்டூக்கிய) சுருதி கூறுகின்றது.

सूतसंहितें यज्ञवैभवखण्डे १२ अध्यायः ॥

ஷை கஉ-வது அத்தியாயம்.

" ब्रह्मणोऽभिन्नरूपे तु चेतनाचेतनात्मकः ॥
विभागः कल्पितः शक्त्या न स्वतः पण्डितोत्तमाः ॥

பிரஹ்மத்தின் அபின்னவடிவத்தில் சேதனை சேதன வடிவமான விபாகம் சக்தியினால் கற்பிக்கப்பட்டதாம். பண்டிதோத்தமர்களே? இயல்பாகவன்று.

ब्रह्मणश्चेतनाकार कल्पिता चेतनाभिदा ।
सर्वज्ञत्वादिका स्तम्बपर्यन्ता माययैव तु ॥

பிரஹ்மத்தின் சேதனவடிவத்தில் சர்வஞ்ஞத்துவ முதல் ஸ்தம்பபரியந்தமான சேதனபேதம் மாயையினாலேயே கற்பிக்கப்பட்டதாம்.

उत्कर्षश्चापकर्षश्च मायया तेषु कल्पितः ।
नियंतृत्वनियम्यत्वाद्याकाराश्च प्रकल्पिताः ॥

அவற்றில் உயர்வு தாழ்வும் மாயையினால் கற்பிக்கப்பட்டதாம். நியமிக்குந்தன்மை நியமிக்கப்படுந்தன்மை முதலிய வடிவங்களும் கற்பிக்கப்பட்டனவாம்.

सूतसंहिते यज्ञवैभवखण्डे १५ अध्यायः ॥

ஷை—கரு-வது அத்தியாம்.

घटकुड्यकुसूलादिपदार्थेषु मुनीश्वराः ।
सत्ता या भासते सैका सत्ताकारतयैवतु ॥

குடம் சுவர் குதிர் முதலிய பதார்த்தங்களில், முனீசுவரர்களே! எந்த சத்தை தோற்றுகின்றதோ அது சத்தைவடிவத்தன்மையால் ஒன்றேயாம்

सा विशेषेण रूपेण विभिन्नेति च केचन ।
तदसंगतमेवेति प्रवदन्ति मनीषिणः ॥

அதுவிசேஷவடிவத்தால் வேறுபட்டதாமென்பர் சிலர், அதுபொருத்தமின்றியதாமென்று அறிஞர் கூறுகின்றனர்;

विशेषरूपस्याभावाद्भेदाभावेन हेतुना ।
सति भेदे विशेषः स्यान्नाभेदे हि मुनीश्वराः ॥

பேதமின்மையாகிய காரணத்தால், விசேஷவடிவ மில்லாமையால். முனீசுவரர்களே! பேதமுளதெனின் விசேஷமிருக்கும்; அபேதத்தில் இராது.

भेदाकारस्तु सत्ताया भिन्नश्चेच्छून्यतत्त्ववत् ।
शून्यमेव भवेन्नैव भेदाकारो भवेद्द्विजाः ॥

துவிஜர்களே? பேதவடிவம் சத்தையினும் வேறுபட்டதெனின், சூனிய தத்துவம்போல் சூனியமேயாம்; பேதவடிவமாகாது.

भेदाकारः स सत्ताया अभिन्नश्चेत्स सैव हि ।
भिन्नाभिन्नौ यदि स्यातां दोषद्वयसमागमः ॥

பேதவடிவமாகிய அது சத்தையினும் வேறுபட்டதன்றெனின், அது (பேதவடிவம்) அதுவே (சத்தையே) யாம். பின்னபின்னமாகுக வெனின் தோஷமிரண்டின் சம்பவமாம்.

तस्मात्सत्तातिरेकेण विशेषार्थो न विद्यते ॥
विशेषार्थप्रतीतिस्तु भ्रांतिसिद्धा न संशयः ॥

ஆதலால் சத்தைக்குவேருக விசேஷார்த்தமில்லை. விசேஷார்த்தத் தோற்றமோ பிராந்தியினுல் சித்தித்ததாம்; சம்சயமில்லை.

अत एका सदा सत्ता सैव ब्रह्म परात्परम् ॥
सत्ताया यदि भिन्नं चेद्ब्रह्मासत्स्यान्नृशृङ्गवत् ॥

ஆதலால் எப்போதும் சத்தைஒன்றே. அதுவேபாராற்பரமான பிரஹ்மமாம். பிரஹ்மம் சத்தையைவிட வேறுபட்டதெனின் மனிதக்கொம்பு போல் அசத்தாம்.

तत्रैवं सति विप्रेन्द्रा ये पदार्था घटादयः ॥
तेतु सत्तातिरेकेण न विद्यन्ते कथंचन ॥

அங்கு இவ்வாறு இருக்கவே பிராஹ்மணோத்தமர்களே! கடாதிபதார்த்தங்கள் எவையோ அவை சத்தைக்குவேருக எவ்விதத்தாலும் இல்லை.

ब्रह्मैवेदमिति प्राह श्रुतिरप्यतिनिर्मला ॥
विदुषामनुभूतिश्च तथैव हि न संशयः ।

மிகநிர்மலமான சுருதியும் "நிச்சயமாக இவ்வெல்லாம் பிரஹ்மமே" என்று கூறுகின்றது. வித்துவான்களது அநுபூதியும் அவ்வாரேயாம்; சம்சயமில்லை.

अत सर्वमिदं शंभुरिति वित्त विचक्षणाः ॥

मृच्छरावादिरूपेण यथा भाति स्वभावतः ।
तथा सर्वतया भाति शिवः सर्वावभासकः ॥

ஆதலால் புத்திமான்களே இவ்வெல்லாம் சம்புவென்று அறியுங்கள் எப்படி மண் சட்டி முதலிய வடிவாக இயல்பாய்த் தோற்றுகின்றதோ, அப்படியே எல்லாவற்றையும் விளக்கும் சிவம் எல்லாமாக விளங்குகின்றது.

कटकादिविभेदेन यथा हेम प्रकाशते ।
तथा सर्वतया भाति शिवः सर्वावभासकः ॥

எப்படிப் பொன் காப்புமுதலிய பேதமாகப் பிரகாசிக்கின்றதோ, அப்படியே எல்லாவற்றையும் விளக்கும் சிவம் எல்லாமாக விளங்குகின்றது.

शुक्तिकारजताकारा यथा भाति स्वभावतः ।
तथा सर्वतया भाति शिवः सर्वावभासकः ॥

எப்படிச் சுத்திகை இயல்பாக வெள்ளிவடிவமாகத் தோற்றுகின்றதோ, அப்படியே எல்லாவற்றையும் விளக்கும் சிவம் எல்லாமாக விளங்குகின்றது.

अन्धकारः प्रकाशश्च यथाकाशे प्रकाशते ।
जडाजडमिदं सर्वं तथा भाति परमात्मनि ॥

எப்படிஆகாசத்தில் இருளும்ஒளியும் பிரகாசிக்கின்றனவோ, அப்படியேஜடாஜடமாகிய இவ்வெல்லாம்பரமாத்மாவினிடத்துப்பிரகாசிக்கின்றன.

वीचीतरङ्गपूर्वास्तु यथा भान्ति महोदधौ ।
महदादिविशेषान्तं जगद्भाति तथात्मनि ॥

எப்படி பேரலைசிற்றலை முதலியன பெருங்கடலில் விளங்குகின்றனவோ, அப்படியே மகத்துமுதல் விசேஷமீறுயுள்ள ஜகத்து ஆத்மாவில் விளங்குகின்றது.

भूतानि शंभु र्भुवनानि शंभु र्वनानि शंभुः गिरियश्च शंभुः ।
स एव सर्वं न ततोऽतिरिक्तं ततः स एकः परमार्थमेतत् ॥

பூதங்களும் சம்பு. புவனங்களும் சம்பு. வனங்களும் சம்பு. மலைகளும் சம்பு. அதுவே (சம்புவே) எல்லாம். அதனின் வேறுபட்டதில்லை. ஆதலால் அவர் ஒருவரே. இது பரமார்த்தம் (உண்மை).

सूतसंहिते यज्ञवैभवखण्डे ३९ अध्यायः ॥

ஷை ௩௯-வது அத்தியாயம்.

“ कल्पितद्वैतमात्रे तु नैव मानमियं श्रुतिः ।

तत्र प्रयोजनाभावात्परमार्थनिरूपणे ॥

கற்பிததுவைத மாத்திரத்தில் இச்சுருதி பிரமாணமன்று; பரமார்த்த நிருபணஞ்செய்யுமிடத்து அதிற் பிரயோஜனமின்மையால்,

अद्वैतं परमानन्दं ब्रह्मवस्तु न चापरम् ।

तत्र प्रयोजनं विप्रा अस्त्येव हि न संशयः ॥

அத்வைதம் பரமாநந்தமாகிய பிரஹ்மம்வஸ்துவாம்; வேறன்று. அதில் பிராமணர்களே? பிரயோசனம் இருக்கவே செய்கின்றது; சம்சயமில்லை.

यत्र प्रयोजनं तत्रश्रुतिर्मानमिति स्थितिः ।

अतः प्रयोजनाभावाद्वैतं न प्रतिपाद्यते ॥

எங்குப் பிரயோசனமுண்டோ அங்கு சுருதிபிரமாண மென்பது நிலையாம். ஆதலால் பிரயோசனமின்மையின் துவைதம் பிரதிபாதிக்கப்படுவதில்லை.

अनूद्यद्वैतमद्वैतं प्रतिपादयति श्रुतिः ।

स्मृतीनां च पुराणानां भारतादेस्तथैव च ॥

तथा शैवागमादीनां तर्काणां च द्विजोत्तमाः ।

अद्वैतनिष्ठतैवोक्ता न द्वैतपरता सदा ॥

துவைதத்தை அநுவதித்து, அத்வைதத்தினைப் பிரதிபாதிக்கின்றது சுருதி. ஸ்மிருதிகளுக்கும், புராணங்களுக்கும், அவ்வாறே பாரதாதிகளுக்கும், அவ்வாறே சைவாகமமுதலியவற்றிற்கும், தர்க்கங்களுக்கும், பிராஹ்மணோத்தமர்களே? அத்வைத பரத்துவமே சொல்லப்பட்டுளது; துவைத பரத்துவம் எப்போதும் இல்லை.

अध्यस्ताज्ञानतत्कार्यनिवृत्तिद्वारतोऽद्वयम् ।

बोधयन्ति मुदा काश्चिच्छ्रुतयः पण्डितोत्तमाः ॥

பண்டிதோத்தமர்களே! அத்தியஸ்தமான அஞ்ஞான தற்காரியங்களின் நிவிருத்திவாயிலாக அத்வயத்தினைச் சில சுருதிகள் போதிக்கின்றன.

साक्षाद्विधिमुखेनैव ब्रह्म सत्यादिलक्षणम् ।
बोधयन्ति मुदा काश्चिच्छ्रुतयः पण्डितोत्तमाः ॥

பண்டிதோத்தமர்களே? சில சுருதிகள் பிரஹ்மத்தில் சத்தியாதி லக்ஷணமுடையதாக நேரேவிதிமுகத்தினாலேயே அறிவிக்கின்றன.

साधकस्यैव जीवस्य स्वाभाविकशिवात्मताम् ।
बोधयन्ती श्रुतिर्भ्रान्तजीवत्वं बाधतेखलु ॥

சாதகனாகிய ஜீவனுக்கே சுவாபாவிக சிவாத்மத்தன்மையினைப் போதிக்குஞ் சுருதி பிராந்த (மயக்கத்தினாலாகிய) ஜீவத்தன்மையினை நிச்சயமாய்ப் பிரதிபாதிக்கின்றது,

जीवत्वं चेतनस्यास्य स्वाभाविकमिति द्विजाः ।
केचिद्वदन्ति वार्तैषा न तत्स्वाभाविकं सदा ॥

துவிஜர்களே! ஜீவத்தன்மை இச்சேதனத்திற்கு சுவாபாவிகமென்று சிலர் கூறுகின்றனர்; இது சொல்மாத்திரமாம். அது எப்போதும் சுவாபாவிகமன்று.

यदि स्वाभाविकं तर्हि जीवत्वं सर्वदा भवेत् ।
नास्ति तस्य निवृत्तिर्हि स्वतः सिद्धं न नश्यति ॥

சுவாபாவிகமாமாயின், ஜீவத்துவம் எப்போதும் இருக்கும். அதற்கு நிவிருத்தியேயில்லை. இயல்பாகச் சித்தித்தது நசியாது".

இவ்வத்தியாயத்தில் ஜீவத்துவம் சுவாபாவிகமென்று கூறும், அநேக வாதிகளின் பூர்வபக்ஷம் அநுவதித்து நிராகரிக்கப்பட்டுளது, அது விரிவஞ்சி இங்குவிடப்பட்டது.

यज्ञवैभवखण्डे ब्रह्मगीतायां ७ अध्यायः ॥

ஷை பிரஹ்மகீதை எ-வது அத்தியாயம்.

" यथाऽऽकाशो घटाकाशमहाकाशप्रभेदतः ।
कल्पितः पराचिज्जीवशिवरूपेण कल्पितः ॥

